கேளாத சொல்லைக் கேட்டமையாலும், அச்சொல்லைக் கேட்டவுடன் கலங்கினர். ஆயின் உடனே தெளிவடைந்து தமது உடற்கண் தமக்கென ஒரு பற்று மிலராய்த் தன் உயிர்த் தலைவனை நோக்கிக் கூறிய தாவது,

"இன்றுநீர் எனக்கருள் செய்தது இதுவேல்
என்னு யிர்க்கொரு நாதர்நீர் உரைத்த
தொன்றை நான்செயும் அத்தனை யல்லால்
உரிமை வேறுள தோஎனக் கு" (இயற்பகை, க)

என்பனர.

இவரே கணவனைக் கடவுளாகக் கொண்டொழுகும் ஒழுக்கத்தை இவ்வுலகினர்க்கு விளக்கினராவர். திருமடந்தைக்கும் இத்தகைய உயர் பண்பு இல்லை யென்பார், "திகைத்து நின்றனர் திருவினும் பெரியாள்" என்றார் உடல் நலத்தால் திருவினையொத்து உள நலத்தால் அவளினும் மேம்பட்டவளென்பதற்கு, இன்னும் இப்பெண்மணி தமது கணவன் அடியாரிடத்திற் பரிவு கூர்ந்த வண்ணமே கணவன் தன்மையளாய் அடியார்பாற் பரிவு கூர்ந்தாளென்பது சுற்றத்தார் இயற்பகையாரைத் தாக்கிய போது இவள் கூறிய மொழியாற் புலனாம்.

"மறைமுனி அஞ்சினன்போல் மாதினைப் பார்க்க மாதும்
இறைவனே அஞ்ச வேண்டா இயற்பகை வெல்லும் என்ன"
(இயற்பகை, கக)

என்றது காண்க.

'இறைவனே' என்றமையால் அடியாரை இயற்பகையார் இறைவனைக் கருதிய வண்ணமே அவர் மனைவியாரும கருதினரென்பது தெளிவு.

அடியவராய் வந்த இறைவன்பால் இருவரும் ஒத்த பேரன்புடையாராய்த் திகழ்ந்தனராதலின், இருவரும் ஒரே பொழுதில் சிவனுலகப் பெருவாழ்வெய்தப்பெற்றனர். இயற்பகையார்க்குக் கிடைத்த பெருநிலையே அவரது மனைவியார்க்குங் கிடைத்ததென்பது,

"நண்ணிய மனைவி யோடு நம்முடன் போது கென்று"
(இயற்பகை, ௩௩)

"திருவளர் சிறப்பின் மிக்க
திருத்தொண்டர் தமக்குந் தோற்ற
மருவிய தெய்வக் கற்பின்
மனைவியார் தமக்குந் தக்க
பெருகிய அருளி னீடும்
பேறளித்து இமையோ ரேத்தப்
பொருவிடைப் பாகர் மன்னும்
பொற்பொது வதனுட் புக்கார்"
(இயற்பகை, ௩௪)

என்பதாற் போதரும்.

திருநீலகண்டரைப் போலவே அவரது மனைவியாருந் துறவு பூண்டிருந்தது பெரிதும் வியக்கற்பாலது. மாதரடக்கத்துக்கு இணையற்ற எடுத்துக்காட்டாவார அவரே. உற்றார் உறவினர் அயலார் என்பார் ஒருவருக்குந் தமது நிலையை அப் பெண்மணியார் கூறிற்றிலர்.

"அற்புறு புணர்ச்சி யின்மை அயலறி யாமை
வாழ்ந்தார்" (திருநீலகண்டர், அ)

என்பதாற்றெளிக.

இறைவன் உலகத்துக்கு அவர் துறவை விளக்க வில்லையாயின் அவர் முதுமைப் பருவத்திலும் ஒருவரும் அதனை அறிந்திருத்தல் முடியாது. நீரக்துறந்த அவர் தமது கணவனோடு பேரின்பவீட்டினைத் தலைப்பட்டாரெனக.

இளையான்குடி மாற நாயனார் மனைவி தமது கணவனார்க்குத் தக்க அமையத்தில் துணைபுரியும பேரமைச்சர் போல்வதில் ஒப்பற்றவர், அடியார்க்கு அமுது செய்வித்தற் பொருட்டுச் செந்நெல் முளை வாரிக்கொண்டு வரும்படி சொன்னதும், குறும்பயிர் கொண்டு வேறு வேறு கறியமுதாக்கியதும அப் பெண்மணியே. நள்ளிரவில் ஒன்றுங் கிடையாத விடத்து ஒருவரையுங் குறை கூறாது தன்வினையை நொந்ததும் மிகுதியாகக் கறியமுது ஆக்க இயலா விடத்து தினைவிறைக் குறையை நேர்ந்ததுந் தன்னலங் கருதாது வித்தினையும் வீட்டுக் கூறையினையும் அடியார் பொருட்டுப் பயன் படுத்தியதும் பற்றற்ற அவரது உயர் தன்மையினையும் விருந்தோம்பும் அளப்பிலா ஆர்வத்தையும் தெள்ளிதின் உணர்த்தும் இதனாலே நாயனாரோடு அவரும் இறைவனது பேரின்பப் பேற்றிற் குரியரானார்.

"அன்பனே அன்பர் பூசை அளித்தநீ அணங்கி னோடும்
என்பெரும் உலகையெய்தி"

என்றது காண்க.

அமர்நீதி நாயனார் மனைவியுந் தமது கணவன் தொண்டிற்குத் தடை செய்யாது துணை நின்றதால், அவரோடுங் குடும்பத்தோடும் சிவபுரி யணைந்தனர்.

குங்கிலியக் கலய நாயனார் மனைவியும் மிக்க வறுமை வந்த விடத்தும், உணவிற்கு முட்டுப்பாடுற்ற காலத்தும் கணவனார் திருப்பணிக்குப் பயன்படும் பொருட்டுத் தமது திருமங்கல நாணை விற்றவிடத்தும் வருந்தாதிருந்து இறைவனருளாற் செல்வம் வந்த காலை,

"அல்லொத்த கண்டன் எம்மான் அருள்தர வந்தது"
(குங்கிலிய. சுக)

என்றமையால், அவரது கற்புங் கனிவுங் கொண்டாடத்தக்கன.

அரிவாட்டாய நாயனார் மனைவியும் பசியால் வருந்திய காலத்துந் தமது கணவனார்க்குத் துணையாக அவர் பின்னே திருக்கோயிலுக்கு ஆனைந்து மேந்திச் சென்றார் ஆதலால் இறைவன்

"நன்றுநீ புரிந்த செய்கை நன்னுத லுடனே கூட
வொன்றிநம் முலகில் வாழ்வாய்"
(அரிவாட்டாய, உக)

என்று பேரருள் செய்தனர்.

அப்பூதியடிகள் மனைவியார் புதல்வன் இறந்த விடத்துந் துன்புற்று வருந்துதலை மேற்கொள்ளாது ஆளுடைய அரசர்க்கு அமுது செய்விக்கும் பெருந் தொண்டினையே இயற்ற முற்பட்டது மிகவும் வியக்கற் பாலது.

ஏயர் கோன் கலிக்காம நாயனார் மனைவியாரும் தமது கணவன் உயிர் நீத்ததை யறிந்தும் தாமும் அழாது பிறர் அழுதலையுந் தடுத்து ஆளுடைய நம்பியைச் சிறப்பாக வரவேற்றது செயற்கருஞ் செய்கையாகும்.

"மருவலிங் கணைந்தார் நம்பி
யென்றுமுன் வந்தார் கூற
வொருவரு மழுதல் செய்யா
தொழிகவென் றுரைத்துப் பின்னர்"
(ஏயர்கோன், ௩௬௪)

"கணவர்தஞ் செய்கை தன்னைக் கரந்துகா வலரை நம்பி
யணைவுறும் பொழுது சால வலங்கரித் தெதிர்போ மென்னப்
புணர்நிலை வாயிற் றீபம் பூரண கும்பம் வைத்துத்
துணர்மலர் மாலை தூக்கித் தொழுதெதிர் கொள்ளச் சென்றார்."
(ஏயர்கோன், ௩௬௬)

திருநீலநக்க நாயனார் மனைவியும் இறைவர் பாற் பேரன்புடையவரென்பது சிவலிங்கப் பெருமானுடைய திருமேனி மீது ஓர் சிலந்தி விழுந்ததைக் கண்டவுடனே அச்சங்கொண்டு அன்பினால் ஊதித் துமிந்தமையாலும், ஊதித் துமிந்தது போகத் திருமேனியின் எஞ்சிய பகுதியைச் சிலந்தியின் கொப்புளம் போலத் திருநீலநக்க நாயனார்க்கு இறைவன் கனவிற் காட்டினமையாலுந் தெளியப்படும்.

பரவையாருஞ் சங்கிலியாரும் உமையம்மையார் சேடியராதலின், அவர் பெருமை கூறவேண்டியதில்லை.

ஆளுடைய நம்பிக்கு மணஞ்செய்யக் கருதிய புத்தூர்ச் சடங்கவி சிவாசாரியார் மகள் திருநாவலூர

ரையே ஒழியாது நினைந்திருந்து சிவலோக மடைந்த மையான், அவள் கற்பிற்சிறந்த தனி நாயகியாவள். ஆடவருள் தமக்குக் கணவராய்ப் பெறுதற்குரிய ஒருவரையே உள்ளத்தில் நினைப்பதும், உள்ளத்தில் நினைத்த மாத்திரையிலேயே மணம் நிகழ்ந்ததாகக் கருதி, நினைத்த மணாளனைப் பெறுதவிடத்துப் பிறரை நோக்காத பெருந்தன்மையே சிறந்ததொரு கற்பு முறையாமென்று கொள்வதும் அக்காலத்திலே மேன்மக்களாற் போற்றப்பட்டு வந்தன. அதற்கு இவர் சிறந்த எடுத்துக்காட்டாவார். திருநாவுக்கரசர் தமக்கையராகிய திலகவதியாரோ தம்மை மணஞ்செய்ய விருந்த கலிப்பகையாரைத் தமது கணவனாக முற்றுங் கருதி விட்டமையால், அவர் இறந்தவுடனே தாம் கைம்மை நோன்பு மேற்கொள்வதையே எண்ணாது உயிர்விடத் துணிந்தமை மிகவும் வியக்கத் தக்கதோர் செயலாகும். நினைந்த அளவிலே அன்பு செலுத்துதல் தலையன்பாகும் முற்பிறவித் தொடர்பாக உழுவலன்பு நிகழக் கூடிய இடத்தேதான் அத்தகையதாகிய தலையன்பு நிகழுவதாகும். கலிப்பகையாரைத் திலகவதியார் கண்டனரோ கண்டிலரோ என்பது சரித்திரத்தால் விளங்கவில்லை. தமது கணவனைப் பற்றி அவர் கேட்ட அளவிலேயே அவர் மாட்டு அன்பு வைத்தார். கேட்டவுடன் காதலித்தல் தலையன்பெனவும் கூடியவுடன் காதல் மிகுதல் கடையன்பெனவுங் கூறுப. தலையன்புக்குக் காரணம் எழுமையுந் தொடர்ந்த அன்பாகிய உழுவலன்பெனப்படுமாதலின் அது பல் பிறவிகளிலே செவ்விதிற் கைக்

கொண்ட கற்பு நிலையின் பயனாகும் கற்பு நிலையில் நிற்றல் மெய்த்துறவிற் கேதுவாகும். எல்லாப் பொருள்களினுஞ் சிறந்ததாகக் கருதிக் காதலித்த கணவன் தொடர்பும் நிலையிலா இயல்பிற்றென்று கொள்ளவேண்டுங் காலத்தே பரம்பொருளினிடத்தே பேரன்பு விளையும். பரம்பொருளாகிய பற்றற்ற இறைவனைப் பற்றிய காலத்தே உலகப் பற்றறும். இவ்வுண்மை திலகவதியார் வாழ்க்கையால் மலையிலக்காக விளங்கியதுபோலப் பிறவாறுகளால் விளங்குவதில்லை. கன்னிப் பருவத்தே நிலையாமைகண்டு அசைவற்ற பற்றற்ற உறுதியுடன் பெருந்துறவு பூண்ட மங்கையர்தலைவி திலகவதியாரே யாவர்.

காரைக்காலம்மையாராகிய புனிதவதியார் தமது கணவனோடு உடனுறைந்த காலை அவனும் அறியாத வண்ணம் சிவபெருமானிடத்திலும் சிவனடியாரிடத்திலும் அளவிறந்த பேரன்பு செலுத்தினமை அவரது ஒப்பற்ற அடக்கத்தையும் முன்னைப் பெருந்தவத்தையுங் குறிப்பனவாகும். பெண்மணிகளுள் அவரே பேரற்புதம் இயற்றினார். இறையன்போடு பேரறிவும் உடையராதலின், அற்புதத் திருவந்தாதி முதலிய நுண்பொருள் செறிந்த அமுதத் திருவருட் பாடல்கள் திருவாய் மலர்ந்தருளினார். இல்லற வாழ்க்கையில் தமக்கென யாதொரு விருப்பமும் இல்லாதவராயிருந்தும் உலகியல்புக்குத் தக்கவாறு தமது பெற்றோர் விருப்பப்படி மணந்தும் கொழுநன் விருப்பப்படி இல்லறம் நடத்தியும் ஒருவருமறியாவண்ணம் இறைவன்பாற் பேரன்பு செலுத்திய இவரது பேரடக்கப்

பேராற்றல் யாவராலும் வியத்தற்குரியது. இவரைப் போல் இவரையன்றி வேறெவருமில்லை யென்பது மிகத்தெளிவான உண்மையாகும்.

பொதுவாக உலகத்தாரும் சிறப்பாகத் தமது கணவனாகிய மன்னனும் அவனது குடிகளும் சிவநெறியைத் தலைக்கூடி உய்யவேண்டு மென்னும் பெருங் கருணையினாலே சைவசமயத்தை நிலைநாட்டிய பெண் மணியார் மங்கையர்க்கரசியாராவர். பாண்டிய நாட்டையாளுதற்குரிய சிறந்த மேதாவிப் பெண்ணரசாய் இவர் திகழ்ந்தமையால், எவ்வெவர் செய்திகளை எவ்வெவ் வகையில் இயற்றிப் பயன்காண வேண்டுமோ அவ் வவ்வகையில் அவற்றைச் செய்து முடிப்பதில் இணையற்ற திறமை வாய்ந்தவர். நாட்டிற்கு எல்லா நன்மைகளினும் மேம்பட்டது சமயப் பாதுகாப்பாதலின், தன் கணவனாகிய அரசன் சமண சமயத்தில் ஆழ்ந்திருத்தலினும், தான் யாது செய்தல் கூடுமென்று நினையாது திருஞானசம்பந்தப் பெருமானை வரவழைத்துச் சைவசமயத்தை நிலைநாட்டினமை இவரது நுண்ணறிவையும், கிளைநடிப் பேரன்மையும் விளக்குவதாகும். கணவன் சமணசமயத்திற் புகுந்ததற்குக் காரணம் ஊழ்வினையேயன்றி வேறில்லை. அவர்பால் அவர் வெறுப்புக் கொள்ளாது அவரோடு இல்லறம் நடாத்தி வந்தமை இவரது மனத்தின் செம்மையைத் துலக்குவதாகும். சமணரிடத்துஞ் செவ்விய முறையில் வழக்காடி உண்மையை நிலைநாட்டுவதனையே அரசன் மாட்டும் வற்புறுத்தினரேயன்றி ஒருபாற் சார்ந்து சைவசமயத்தைக் கொள்ளும்படி

வேண்டவில்லை. தம்மவரிலே சைவசமயத்தில் எல்லையில்லாத பற்றுடையராயிருந்தனரென்பது சமணரால் சிவனடியார்க்கு இடையூறு நேர்ந்தபோது தாம் உயிர்விடக் கருதினமையால் தெற்றெனப் புலனாகும். சமணர் தோற்றபின்பு அவர் கழுவேறினமை பற்றி இவர் யாதுங் கூறவில்லை. இல்லற நெறியினும் அரசியல் முறையினுஞ் சிறந்து சமநிலையை நிலைநாட்டியதில் இவர் ஒப்புயர்வற்ற பண்பினராவர்.

பெரியபுராணத்தை இயற்றுவித்த அநபாயசோழனைப் பற்றிச் சேக்கிழார் தமது பெரிய புராணத்திற் பல இடங்களிலுங் குறித்துள்ளார். அநபாய மன்னன் பொன்னம்பலத்தினைத் தூய பொன்னினால் வேய்ந்ததாக ஆசிரியர் குறிக்கிறார்.

"மேய விவ்வுரை கொண்டு விரும்புமாஞ்
சேய வன்றிருப் பேரம் பலஞ்செய்ய
தூய பொன்னணி சோழனீ டூழிபா
ராய சீர்அந பாய னரசவை." (பாயிரம், அ)

அநபாயன் இந்த நாடு முழுவதூஉந் தன்னரசினைத் தனிச் சிறப்புடன் ஆண்டனனென்றும், தன்கீழ் வாழ்வார் மாட்டு அருளுடையனாய்த் திகழ்ந்தானென்றுங் கூறுவார்,

"வையம் பொதுக்கடிந் தினிது காக்குங்
கொற்றவ னநபா யன்பொற் குடைநிழற் குளிர்வ தென்றால்
மற்றதன் பெருமை நம்மால் வரம்புற விளம்ப லாமோ"

என்றார்.

மனுநீதி கண்ட சோழனின் பெருமை கூறுங் கால "மன்னு சீரந பாயன் வழிமுதல்" என்றார். எறிபத்த நாயனார் புராணத்திலும் இயற்பகை நாயனார் புராணத்திலும் அநபாயனது மரபின் சிறப்புச் சில விடங்களில் விரிக்கப்பட்டுள்ளது.

"சென்னி வெண்குடை நீட நபாயன் திருக்குலம்புகழ்
பெருகிய சிறப்பின்" (இயற்பகை, க)

"மன்னிய அநபா யன்சீர் மரபின்மா நகர மாகுந்
தொன்னெடுங் கருவூ ரென்னுஞ் சுடர்மணி வீதி மூதூர்"
(எறிபத், உ)

அநபாயனது செங்கோற் பெருமையை ஆசிரியர் சேக்கிழார் ஓர் உவமையாக வைத்து விளக்கினார்.

"வம்புய மலராள் மார்ப னநபாய னென்னுஞ் சீர்த்தி
செம்பியன் செங்கோ லென்னத் தென்னன்கூ னிமிர்ந்த
தன்றே"

ஆசிரியர் சேக்கிழார் மடந்தையர் வனப்பினை பரவையார் சங்கிலியார் வரலாற்றின் கண்ணும், நாவரசர்க்கு மயல் விளைக்க முயன்ற அரமகளிரைக் கூறிய விடத்தும், பூம்பாவையையெழுப்பிய சரிதங்கூறுமிடத்துஞ் செவ்விதின் விளக்கினார். பரவையார் வனப்பை விதந்தோதுவார், அந்நங்கையாரின் ஒவ்வொரு உறுப்பிற்கும் உவமை தனித்தனியே கூறாது அவர்க்குக்கூறும் உவமைகளனைத்தையுந் தொகுத்துரைத்தனர்.

"மானினம் பிணையோ தெய்வ வளரிள முகையோ வாசத்
தேனிளம் பதமோ வேலைத் திரையிளம் பவள வல்லிக்

கானிளங் கொடியோ திங்கட் கதிரிளங் கொழுந்தோ காமன்
றானிளம் பருவங் கற்குந் தனியிளந் தனுவோ வென்ன''
(தடுத்தாட், கஅ)

எவ்வுறுப்பினுங் கண்ணனது சிறப்பினதாதலின், மான்போன்ற மருட்சியான பார்வையுடைய நங்கைக்குப் பெண்மானை உவமித்தார். 'விழியாற் பிணையாம்' எனனுந் திருக்கோவையார் அடியையுங் காண்க. 'மானினேர் விழி மாதராய்' என்றது மது. மலர் முகையினைப் பல்லிற்கு உவமித்தல் மரபாதலின், 'இளமுகையோ' வென்றார். நங்கையாரது நயமிக்க இன்சொல்லுக்குத் தேனினை உவமித்தார் என்றலுமுண்டு மேனியின் செவ்விக்கும் மென்மைக்கும் பவளத்தையுங் கொடியையும் உவமை கூறினார். சிறந்த உறுப்புக்களைத் தெரிந்தெடுத்து அவற்றிற்குரிய உவமைகளையே தொகுத்துக் கூறினார். நங்கையாரின் கன்னித் தன்மையையும வாடாது வளர்ந்தொளிரும் எழிலையும வற்புறுத்தும் பொருட்டு, 'இளப்பிணையோ, வளரிளமுகையோ, இளம்பதமோ, இளங்கொடியோ, இளங்கொழுந்தோ, இளந்தனுவோ' என்று ஒவ்வோருவமையோடும், இளமையை இணைத்துக் கூறியது காண்க. கயிலைநின்று ஞாலத் திழிந்தமையின் "தெய்வ வளரிள முகை" யென்றார். புருவத்திற்குச் சிறுவில்லையே உவமித்தல் பொருத்தமாதலாலும், விளையாட்டுப் பருவத்திற் சிறுவில்லையே விற்பயில்வோர் பயன் படுத்துவாராதலாலும், 'இளம் பருவங் கற்குந் தனி யிளந்தனு

இளமை நலமுடைமையால் காமனும் இளமைச் செவ்வியைப் பரவையார்பால் கற்றற்குரியனென்பார், 'காமனுந் தானிளம் பருவங் கற்கு' மென்றார். 'கற்பகத்தின் பூங்கொம்போ' என்ற பாட்டிலும் பரவையார் வனப்பு இனிது விளக்கப்பட்டது.

திருநாவுக்கரசு நாயனார் புராணத்தில் விண்மாதரின் மயல் விளைக்கும் செயல்களைக் கூறுமிடத்து மின்னற் கொடிகள் போல அவர்கள் வந்து இறங்கினமையும், அவர்கள் தமது அருமைக் கனி வாயினாலும், குவளைக் கண்களினாலும், மெல்விரல்களினாலுங் குறிகள் செய்து மயல் விளைத்தமையும் ஆசிரியர் எடுத்தியம்பினாரேயன்றி இழிந்த மொழிகளால் யாதுங் கூறிற்றிலர்.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் புராணத்திலே பூம்பாவையின் பொற்பினைப் புகலுமிடத்து விடந் தீண்டுவதற்குமுன் பொதுவாகவும் உயிர்த்தெழுந்ததற்குப் பின் சிறப்பாகவும் ஆசிரியர் அதனைப் புனைந்துரைத்தனர். பூம்பாவையின் வனப்பின் ஒளியினையே பல உவமைகளால் ஆசிரியர் வியந்தனர். அப்பெண்மணி நடைபயிலுமிடத்தே பல உறுப்புக்களினின்றும் அவற்றின் அணியினின்றும் மின்னொளி வீசினமையால், 'மின்னின்வித்' தெனவும், தூயபொன்மேனி யுடைமையாலும், மிகுந்த மென்மையுடைமையாலுந் 'தமனியக் கொடியின் தளிர்க்கிளை' எனவும், இயல்பாய ஒளியோடு அணி ஒளியுங் கலந்து செஞ்சுடர்க் கொழுந்தெனத் திகழ்ந்தமை

யால், 'மணி கிளரொளியின் அஞ்சுடர்க் கொழுந் தெனவும்' புனைந்துரைத்தார். கன்னிப் பருவத்து மிக்க கவினோடு பெற்றோர்க்கும், பிறர்க்கும் பெரு மகிழ் விளைத்தமையின், 'அழகின் முன்னிளம் பத மென அணிவிளக்கென்ன' என்றார்.

பூம்பாவை உயிர்த்தெழுந்தபின் அவளது உறுப் புக்கள் பலவற்றையுந் தனித்தனியே ஆசிரியர் புனைந் துரைத்தனர். இது பிற்காலப் பெருங் காப்பியங் களின் மரபினைத் தழுவிய முறை. முகத்தினைச் செந் தாமரைக்கும், குழலினை வண்டுக் கூட்டத்தின் ஒழுங் கிற்கும், நுதலினை வானவில்லிற்கும், புருவத்தைக் காமன் சிலைக்கும், கண்ணினைக் கயலுக்கும், மூக்கினை யும் இதழினையும் முறையே பச்சோந்திக்கும் இந்திர கோபத்தினுக்கும், காதின் மகரக்குழைகளைக் காமன் வெற்றிக் கொடிக்கும், கழுத்தினைச் சங்கிற்கும், கொங்கையை அமுதகும்பத்திற்கும், கைகளைக் காந் தட் பூவிற்கும், தொடையினை வாழைத்தண்டிற்கும், முழந்தாளினைப் பொற்பந்திற்கும், கணைக்காலினைக் காமனது அம்புக் கூட்டிற்கும், பரட்டினைச் செம் பொற்றட்டிற்கும், மெல்லிய அடிகளைப் பூந்துணர்க் கும் ஆசிரியர் உவமித்தனர்.

பூம்பாவையே அழகிற் றலைமை வாய்ந்தவளென் பது ஆசிரியர் கருத்தாதலின், 'அழகினுக் கணியாய் நின்றா'ளென்றார். அயன் படைத்த திலோத்தமை யினும் அழகு மிக்கவளென்பார் 'வேதாப் படைத்த வள் அவளினும் நல்லாள்' என்றார். பாவையாளை

'வாசத்தேனிளம் பதம்' என்றனர். பூம்பாவையை 'அழகின் முன்னிளம் பதம்' என்றார். பூம்பாவையின் திருநுதலானது 'அழகின் மாரி பொழிந்திடப் புயற் கிழிட்ட வாங்கிய வானவில்லின் வளரொளி வனப்பு வாய்த்தது' என்றார். மேனியின் ஒளியினைப் பன் முறை விதந்தோதுவது ஆசிரியர் வழக்கம்

'மண்ணிய மணியின் செய்ய வளரொளி மேனியாள்'

'தண்ணளி விரிந்த சோதி வெள்ளத்தில்'

'ஒண்ணிறக் கரிய செய்ய கயலிரண் டொத்து'

'பாவை நாசியும் பவள வாயும்
 நணிய பேரொளியிற் றோன்றும்'

'இளரொளி மகரவேறு கெழுமிய தன்மை யாலும்'

'விற்பொலி தரளக் கோவை விளங்கிய கழுத்து'

'எரியவிழ் காந்தண் மென்பூ'

'மங்கை கைகளாய்க் காந்தி வெள்ளம் அருகிழிந் தனவோ'

'முழந்தாளின் செவ்வி பொலிந்தொளி விளங்கிப் பொங்க'

'காமரு பவளச் சோதி பொற்றிரள் வைரப் பத்தி'

'பூந்துணர் மலர்ந்த போலு நற்பதம் பொலிவு காட்ட'

என்ற இடங்களில் வனப்பொளியை விதந்தமை காண்க.

காமன் சிலைக்குப் புருவத்தை ஒப்பிட்ட காலைப் புருவமிரண்டாதலின், காமனுக்குச் "செருவெழுந் தனுவ தொன்றும் சேமவில் லொன்றுமாக" இரு சிலைகள் உள்ளவெனக் கொள்க. 'மூக்கும் இதழும் அமைந்துள்ள நிலைமை பச்சோந்தியானது தனக்குக்

கீழுள்ள இந்திர கோபத்தைப் பற்றுவதற்குத் தாழ்ந் துள்ளமைபோல இருந்த' தென்றார். இங்ஙனந் தற்குறிப்பேற்ற மமைந்த உதாரணங்கள் பல; அவை விரிக்கிற் பெருகும்.

சங்கிலியாரைக் கோவா முத்திற்குந் தொளைக்கப் படாத முத்திற்கும் வண்டு படியாத வளமிக்க மெல் லரும்பிற்கும் உவமித்தார். (ஏயர்கோன், உஉஎ, உஉஅ) அம்மடந்தையின் மெல்லியல்பையும், மேனி யொளியையும் இனிய தோற்றத்தையும், இணையற்ற முறையில் இரண்டடிகளில் அசிரியர் அமைத்திருத்தல் வியக்கத் தக்கது

"பொன்னு மணியு மலர்ந்தவொளி யமுதி லளாவிப் புதியமதி
தன்னு ணீர்மை யாற்குழைத்துச் சமைத்த மின்னுக்
[கொடிபோல்வாள்."

மேனியின் நிறமானது மின்னிற்சங் குழல், கண், இதழ் முதலிய பகுதிகள் பல்வகை மணிகட்கும் ஒத் திருப்பதனாலே 'பொன்னு மணியும் மலர்ந்த வொளி' என்றார். நாயனார் உள்ளத்தைக் கவர்தலால், 'அமு திலளாவி' யென்றார். கன்னிப் பருவத்தின் இள வெழில் விளங்கத் தோன்றுதலால், 'புதியமதி தன் னுள் நீர்மையினாற் குழைத்து' என்றார். ஒளிமென் சாயலுடையாரென்பார், 'மின்னுக் கொடிபோல்வா' ரென்றார். சங்கிலியார்பால் நாயனார் பெண்ணலம் துய்க்குமிடத்தை யுணர்த்து மிடத்து,

"யாழின்மொழி எழின்முறுவல்
இருங்குழைமேற் கடைபிறழும்
மாழைவிழி வனமுலையார்" (ஏயர், உசுஅ)

என்றார்.

திருவினும் உருவமிக்கா ரென்பார் "புண்டரிகத் தவள் வனப்பைப் புறங்கண்ட தூநலத்தை" யென்றார்

ஆசிரியர் மடந்தையர் வனப்பை வர்ணித்தது போல ஆடவரது வீரத்தையும், இயற்பகை நாயனார் புராணம், எறிபத்தநாயனார் புராணம், ஏனாதிநாதர் புராணம், கண்ணப்ப நாயனார் புராணம் என்னும் நான்கினுள்ளும் இனியெடுத்து விளக்கினார். இயற்பகைநாயனார் தாமொருவரே சுற்றத்தாரனைவரையுங் கொன்று வென்றதை ஆசிரியர் மிக்க பெருமிதந் தோன்ற விரித்துரைத்தனர்.

"பெருவிற லாளி யென்னப் பிறங்கெரி சிதற நோக்கிப்
பரிபவப் பட்டு வந்த படர்பெருஞ் சுற்றத் தாரை
ஒருவரு மெதிர்நில் லாதே யோடிப்போய்ப் பிழையு மன்
[றேல்
எரிசுடர் வாளிற் கூறாய்த் துடிக்கின்றீ ரென்று நேர்ந்தார"

"மூண்டுமுன் பலராய் வந்தார் தனிவந்து முட்டி னார்கள்
வேண்டிய திசைக டோறும் வேறுவே றமர்செய் போழ்தி
லாண்டகை வீரர் தாமே யனைவர்க்கு மனைவ ராகிக்
காண்டகு விசையிற் பாய்ந்து கலந்துமுன் றுணித்து
வீழ்த்தார்" (இயற்பகை, கஎ, ௨௨)

படையெழுச்சியின் சிறப்பை எறிபத்தநாயனார் புராணத்தில் விளக்கினார்.

"பொங்கொலிச சின்ன மெல்லாம் பொருபடை மிடைந்த
[பொற்பின்
மங்குல்வான் கிளர்ச்சி காண மருங்கெழுந் தியம்பி மல்க"

"தூரியத் துவைப்பு முட்டுஞ் சுடர்ப்படை யொலியு மாவின்
றூர்மணி யிசைப்பும் வேழ முழக்கமுந் தடந்தேர்ச் சீரும்
வீரர்தஞ் செருக்கி னார்ப்பு மிக்கெழுந் தொன்று மெல்லைக்
காருடன் கடைநாட் பொங்குங் கடலெனக் கலித்த
[வன்றே" (எறிபத்தர், ௩௧, ௩௨)

படைகள் போர்புரியுஞ் சிறப்பினை ஏனாதிநாத புரா
ணத்தில் இனிது விளக்கினார்.

"வாளொடு விழுமுடல் வென்றவன்
மார்பிடை யறமு னெறிந்திட
ஆளியி னவனு மறிந்தன
ளையினர் பலருள ரெங்கணும்"

"ஆருயிர் கழியவு நிற்பவ
ராண்மையி லிருவரு மொத்தமை
போரடு படைகொ டளப்பவர்
போல்பவ ரளவிலர் பட்டனர்" (ஏனாதி, உய,உக)

வில்விழாவின் சிறப்பும் வேட்டையின் சிறப்பும் கண்
ணப்பநாயனார் புராணத்திற் செவ்வையாக அமைந்
துள்ளது. கண்ணப்பநாயனார் புராணம் எ௮-ம்
பாட்டு:

"ஏனமோடு மானினங்க ளெண்குதிண் கலைக்குலங்
கானமேதி யானைவெம் புலிக்கணங்கள் கான்மரை
யானமா வநேகமா மருண்டெழுந்து பாயமுன்
சேனைவேடர் மேலடர்ந்து சீறியம்பு தூறினார்"

இசையினாலே எல்லா உயிர்களும் ஒத்த உணர்ச்சி
யுடையனவாய்ப் பகைமை யொழித்து இணங்கி நிற்
பதும் எப்பொருளும் அசைவற்று நிற்பதும் ஆனாயர்
புராணத்தில்,

"கலிவாரு மெலிவாரு முணர்வொன்று நயத்தலினுன்
மலிவாய்வெள் ளெயிற்றரவ மயின்மீது மருண்டுவிழுஞ்
சலியாத நிலையரியுர் தடங்களியு முடன்சாரும்
புலிவாயின் மருங்கணையும் புல்வாய புல்வாயும்" (கூச)

"மருவியகால் விசைத்தசையா மரங்கண்மலர்ச் சினைசலியா
கருவரைவீ ழருவிகளுங் கான்யாறுங் கலித்தோடா
பெருமுகிலின் குலங்கள்புடை பெயர்வொழியப் புனல் [சோரா
விருவிசும்பி னிடைமுழங்கா வெழுகடலு மிடைதுளும்பா" (கூரு)

என்னும் பாட்டுக்களிற் செவ்விதிற் புனைந்துரைக்கப் பட்டது. இசையின் அசைவில்லாத் தன்மை திருஞானசம்பந்தர் புராணம் சஙஉ-ல் உரைக்கப்பட்டது. விரிப்பிற் பெருகும்.

இனி இயற்கைப் பொருள் அழகினை ஆசிரியர் செப்பு முறைமையை ஒரு சிறிது ஆராய்வாம். திருமலை சிறப்பு கூறுமிடத்து, உலகத்தை ஒளிபொருந்தியதோர் கொடியாகவும், பல திருப்பதிகளுந் தளிர்களாகவும், கயிலை, அக்கொடியின் முடியிலுள்ள வெண்மலராகவுந் தோன்றுவனவாக வருணித்தார். பிறவுலகங்கள்போல, நிலவுலகமும் ஒளிபெற் றிலங்குவதால், 'ஒளிமணவல்லி' யென்றார். பல தலங்களும் மேலுங் கீழுமுள்ள நிலப் பகுதிகளி லுள்ளனவாயும், பனிமலைப்பாலுள்ள கயிலையானது எப்பகுதிக்கு மேலாவுந் தோன்றினவென்றார்.

"நிலவு மெண்ணி றலங்களு நீடொளி
யிலகு தண்டளி ராக வெழுந்ததோ

ருலக மென்னு மொளிமணி வல்லிமேன்
மலரும் வெண்மலர் போல்வதம் மால்வரை"
(திருமலை, ௬)

என்றது காண்க.

கண்ணப்பநாயனார் புராணத்திலே குறிஞ்சி நில மாக்களாகிய வேடர் வாழ்க்கையை ஆசிரியர் செவ் விதின் இயம்பிப் போந்தனர்.

முத்துக் கொழிக்கும் அருவியின் பாங்கர் யானை மருப்பினாலமைத்த வேலியை யுடையதாய்த் திகழ் வது உடுப்பூ ரென்றமை நயமிக்கது.

"நித்தில வருவிச சார னீள்வரை சூழ்ந்த பாங்கர்
மத்தவெங் களிற்றுக கோட்டு வன்றொடர் வேலி கோலி
யொத்தமைப ரரணஞ் சூழ்ந்த முதுபதி யுடுப்பூ ராகும்"
(கண், உ)

வேடருள் ஆண்குழந்தைகள் தமது ஆண்மைக் கேற்ப விலங்கின் குட்டிகளோடும், பெண்பிள்ளைகள் தமது மென்மைக் கேற்ப, மெல்லிய மான்களோடும் விளையாடுவதை ஆசிரியர் அழகாகச் செப்பினர்.

"வன்புலிக் குருளை யோடும் வயக்கரிக் கன்றி னோடும்
புன்றலைச் சிறும கார்கள் புரிந்துட னாட லன்றி
யன்புறு காதல் கூர வணையுமான் பிணைக ளோடு
மின்புற மருவி யாடு மெயிற்றியர் மகளி ரெங்கும்"
(கண், ௪)

வேட்டுவர் வேட்டைக்கு விரமாய்ச் செல்லும்போது அவரெழுப்பும் ஓசையை நேரிற் கேட்டாற்போலப் புலப்படும் வண்ண மியம்பினமை பாராட்டத்தக்கது.

"வெல்படைத் தறுகண் வெஞ்சொல் வேட்டுவர் கூட்டந் [தோறுங்
கொல்லெறி குத்தென் றார்த்துக் குழுமிய வோசை யன்றிச்
சில்லரித் துடியுங் கொம்புஞ் சிறுகணு குளியுங் கூடிக்
கல்லெனு மொலியின் மேலுங் கறங்கிசை யருவி யெங்கும்"
(கண், ௫)

திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணத்துள், ஐந்திணை வளங்கள் ௬-ம் பாட்டு முதல் ௬௯-ம் பாட்டு வரை தொகுத்துரைக்கப்பட்டன

"குறவா பண்மணி யரித்திதை விதைப்பன குறிஞ்சி
கறவை யானிரை மானுடன் பயில்வன கானம்
பறவை தாமரை யிருந்திற வருந்துவ பழனஞ்
சுறவ முண்மருப் பணங்கயர் வனகழிச சூழல்"

திருஞானசம்பந்தபுராணம் ௬௨௯-ம் பாட்டில், குன்றுகளிற் பனி மூடியிருப்பது குன்றுகள் குளிர் தாங்க மாட்டாது வெண்போர்வை போர்த்திக் கொண்டாற்போன்ற தென்று செப்பினர்.

"சூழ்பனியாற்
குளிர்க்குடைந்து வெண்படாம் போர்த்தனைய குன்று [களும்"

என்றனர்.

பெரிய புராணங்களிற் பல விடங்களிற் பொழில் வருணனை காணப்படுகின்றது. பல்வகை மரங்களைத் தொகுத்துரைப்பது இவர் வழக்கம்.

"நாளிகே ரஞ்செ ருந்தி நறுமலர் நரந்த மெங்குங்
கோளிசா லந்த மாலங் குளிர்மலர்க் குரவ மெங்குந்
தாளிரும் போந்து சந்து தண்மலர் நாக மெங்கு
நீளிலை வஞ்சி காஞ்சி நிறைமலர்க் கோங்க மெங்கும்"
(திருநாட்டுச் சிறப்பு, உ௮)

௨௯-ம் பாட்டும் மரங்களைத் தொகுத் துரைப்பதே.

தடுத்தாட்கொண்ட புராணம் ௯௫-ம் பாட்டும், மர அடுக்குப் பகர்வனவே. ௯௪-ம் பாட்டு வருமாறு:

"வன்னி கொன்றை வாழை சண்பக மார
 மலர்ப்ப லாசொடு செருந்திமந் தாரங்
கன்னி காரங்குர வங்கமழ் புன்னை
 கற்ப பாடலிகள் கூவிள மோங்கித்
துன்னு சாதிமரு மாலதி மௌவ
 றுதைந்த நந்திகர வீர மிடைந்த
பன்ம லர்ப்புனித நந்தவ னங்கள்
 பணிந்து சென்றனன் மணங்கமழ் தாரான்"

திருஞானசம்பந்தர் புராணத்திலே, அந்தணரது வேட்டற்றொழிலை மரங்களு மேற்கொண்டனவென்று ஆசிரியர் நயமுறப் புனைந்தமை பாராட்டத்தக்கது.

"பரந்தவிளை வயற்செய்ய பங்கயமாம் பொங்கெரியில்
வரம்பில்வளர் தேமாவின் கனிகிழிந்த மதுநறுநெய்
நிரந்தரநீ ளிலைக்கடையா லொழுகுதலா னெடிதவ்வூர்
மரங்களுமா குதிவேட்குந் தகையவென மணந்துளதால்"
(திருஞானசம், ௭)

பொழில்களின் அருகேயுள்ள வயல்களில் முளைத்திருக்குஞ் செந்தாமரையின் தேமாமரக் கனிகளின் தேனைது இலைகளினூடேசென்று விழ்தல், நெருப்புக் குண்டத்தில் நெய்யினை ஆகுதி செய்தல் போன்றமையால், 'மரங்களும் வேட்டன' வென்றார். கிளைகள் நெருங்கப்பெற்றுக் கதிரவன் மண்டலத்தை யளவளாவிஞற்போல் வளர்ந்துள்ள செழுமை மிக்க மரங்க

ளையுங்காலை அவற்றின்மேற் படர்ந்த முகில்களி னின்று புனன்மழையாவது, அவற்றின் மலர்களி னின்று தேன்மழையாவது பொழிந்துகொண்டிருந்த மையால் மழை எக்காலத்தும் ஒழியாதிருந்த தென்றார்.

"நனைமருவுஞ் சினைபொதுளி நறுவிரைசூழ் செறிதளிரிற்
றினகரமண் டலம்வருடுஞ் செழுந்தருவின் குலம்பெருகிக்
கனமருவி யசைந்தலையக் களிவண்டு புடைசூழப்
புனன்மழையோ மதுமழையோ பொழிவொழியா பூஞ்
சோலை" (திருநாளைப், ௩)

பொழிலைச் சூழ்ந்து மொய்த்த வண்டுகளின் கூட்டம், நீலமணியாலிழைத்த மணியாரம்போல் விலங்க, மரங் களின் செவ்விய தளிர்கள் நல்ல விரல்கள் போலவும், தளிர்களின் நுனியிலுள்ள மலர் அரும்புகள் நகங் கள் போலவுந் தோன்ற, பெருமரங்கள் நிலமகளின் கைகள் போன்றிருப்ப, வெண்மதியானது நிலமகள் தனது உருவத்தைப் பார்க்கும் பொருட்டுப் பிடித்த கண்ணாடிபோற் றோன்றும்படி மலர்ச் சோலைகள் ஓங்கி வளர்ந்தன வென்றமை நயமிக்கது.

"மொய்யளிசூழ் நிரைநீல முழுவலயங் களினலையச்
செய்யதளிர் நறுவிரலிற் செழுமுகையி னகஞ்சிறப்ப
மெய்யொளியி னிழற்காணு மாடியென வெண்மதியை
வையமகள் கையணைத்தாற் போலுயர்வ மலர்ச்சோலை"
(திருநாவுக்கரசு, க)

பொழில்களிலே திருப்பதிகங்களைக் கிளிகள் கூறப் பூவைகள் கேட்பதாகவும், கிளியும் பூவையும்

சிவனடியார் வரவுகண்டு சிவமொழி பயில்வதாகவுங் கூறியுள்ளார்.

"தெள்ளு மோசைத திருப்பதி கஙகள்பைங
கிள்ளை பாடுவ கேட்பன பூவைகள்" (மனுநீதி, அ)

"சிவமுன் பயின்மொழி பகர்கின் றனவளா
சிறைமென் கிளியொடு சிறுபூவை" (திருநாவு. கசுu)

என்றார்.

நாயன்மார் வாழ்ந்திருந்த திருப்பதிகள் பலவும், மருத நிலத்திலுள்ளனவாதலின், மருத நிலத்திற்குச் சிறப்பாகுரிய உழவினை அழகுற வியம்புவான, ஆசிரியர் பல திருப்பாடல்கள் இயற்றியுள்ளார் திருநாட்டுச் சிறப்பிலே மிகுந்த பாட்டுக்கள் (ம—உசு) உழவு செய்யுமுறையையும் உழத்தியா செய்கையையும், பயிர்கள் மரங்கள் முதலியவற்றின் சிறப்பையுமே பகர்கின்றன

உழத்தியர் வயறகளுள்ள செங்குவளையைப் பறித்தணிதலும், தங்கள் கூந்தலின்பாலுள்ள வண்டுகளை யோட்டுதற் பொருட்டு, மலாகளாகிய கண்களை யோச்ச, அவற்றிலுள்ள வண்டுகளும் முன்னுள்ளவற்றோடு கூடினமையால் ஓட்டு முயற்சி பிறவற்றை வரவழைக்கும பயனையே தநதது. அதனுற் சிறிது மனந்தளர்வெய்தி நெற்றியில் வியர்வைதோன்றப் பெற்றாலும் செந்தாமரைப் பூவினின்றிழியும் புதுத் தேனைப் பருகுவதனல், புன்சிரிப் புடையராயினர் என்றனர். அப்பெண்டிர் பற்கள் முல்லையரும்பை யொப்பன வென்றுங் குறித்தனர்.

'செங்குவளை பறித்தணிவார் கருங்குழல்மேற் சிறைவண்டை
யங்கைமலாக் களைகொடுகைத் தயல்வண்டும் வரவழைப் [பார்
திங்களுநுதல் வெயர்வரும்பச் சிறுமுறுவ றளவரும்பப்
பொங்குமலர்க் கமலத்தின் புதுமதுவாய் மடுத்தயர்வார்'
(திருநாட்டு, கச)

நெல்விளையப் பெற்ற கதிர்கள் சாய்ந்து கிடக்குங் காலை அடியார்கள் ஒருவரை யொருவர் வணங்கித் தாழ்ந்தாற் போன்ற தோற்றமிருந்ததென்பார்,

"பத்தியின் பால ராகிப் பரமனுக் காளா மன்பர்
தத்தமிற் கூடி னார்க டலையினால் வணங்கு மாபோல்
மொய்த்தநீள் பத்தி யின்பால் முதிர்தலை வணங்கி மற்றை
வித்தகர் தன்மை போல விளைந்தன சாலி யெல்லாம்"
(திருநாட்டு, உஉ)

என்றார்.

நெற்குன்றுகளால் மருதமானது குறிஞ்சியாகத் தோன்றிற் றென்பார்,

"கைவினை மள்ளர் வானங் கரக்கவாக் கியநெற் குன்றால்
மொய்வரை யுலகம் போலு முளரிநீர் மருத வைப்பு"
(திருநாட்டு, உரு)

என்றார்

மூங்கிலும் கரும்பும தாழும்படியாகச் செந்நெற் கதிர்கள் மேலோங்கும வளமிக்க சோணாடென்பார்,

"வேழக் கரும்பினொடு மென்கரும்பு தண்வயலிற்
றாழக் கதிர்ச்சாலி தானோங்குந் தன்மையதாய்"

என்றார்.

வேழக் கரும்பு என்பது பெரிய கரும்பு என்பாரு முளர்.

வாழைக் குலைகள் யானைத் துதிக்கை போலத் தோன்ற அதனருகே வளர்ந்த செந்நெற் கதிர்கள் குதிரை முகம்போற் றோன்ற, விளைபொருளேற்றும் பெருவண்டிகள் தேர்போல விளங்க, வயலுழவர் காலாட்படை போலத் தொழி லியற்றினமையால், மருத நிலமானது நால்வகைச் சேனையுடன் மிளிரும் போர்க் களத்தை யொத்த தென்றது பின்வருஞ் செய்யுளிற் காண்க.

"கருங்கதலிப் பெருங்குலைகள் களிற்றுகைம் முகங்காட்ட
மருங்குவளைக் கதிர்சசெந்நெல் வயப்புரவி முகங்காட்டப்
பெருஞ்சகடு தேர்காட்ட வினைஞரார்ப் பொலிபிறங்க
நெருங்கியச தூரங்கபல நிகர்ப்பனவா நிறைமருதம்"

செந்நெல்வயல் நின்று களைஎன எடுத்தெறியப்பட்ட செந்தாமரைப் பூக்களின் பாங்கர், வயற் சங்குகள் முத்துக்களைச் சொரிவதால் மள்ளர்கள் விண்ணவர் போற்றுஞ் சங்கநிதி பதுமநிதி யுடையார் போன்ற னர் என்று வியந்தார்.

"செந்நெ லார்வயற் கட்டசெந் தாமரை
முன்னர் நந்துமிழ் முத்தஞ் சொரிந்திடத்
துன்னு மள்ளர்கைம் மேற்கொண்டு தோன்றுவார்
மன்னு பங்கய மாநிதி போன்றுளார்"

முத்துப் பிறக்கு மிடங்களை விறன்மிண்ட நாயனார் புராணத்துட் டொகுத்துரைத்தமை காண்க.

"வாரி சொரியுங் கதிர்முத்தும்
வயன்மென் கரும்பிற் படுமுத்தும்

வேரல் விளையுங் குளிர்முத்தும்
வேழ மருப்பி னொளிர்முத்து
மூரன் முறுவல் வெண்முத்த
நகையார் தெரிந்து முறைநோக்குஞ்
சேரர் திருநாட் டூர்களின்முன்
சிறந்த மூதூர் செங்குன்றூர்" (விறன்மிண்டர், உ)

இப்பாட்டினுட் கடன் முத்து மினுக்க முடைய தாயும், கரும்பு முத்து பெரியதாயும், மூங்கின் முத்துக் குளிர்ந்ததாயும், யானைக்கொம்பு முத்துப் பரந்த ஒளியுடையதாயு மிருப்பதாகக் குறிப்பித்தார்.

பனிக்காலத்தைக் கூறுமிடத்துக் கதிரவனும், கைநிமிர்க்கமாட்டாது, வெயிற் கதிர்களைக் குறைந்த வளவு காட்டுவதும், மறைப்பதுமா யிருந்தானென்றூர்.

"மொய்பனிகூர் குளிர்வாடை முழுதுலவும் பொழுதேயாய்க்
கொய்தளிர்மென் சோலைகளுங் குலைந்தசையக் குளிர்க் [கொதுங்கி
வெய்யவனுங் கரநிமிர்க்க மாட்டான்போல் விசும்பினிடை
யைதுவெயில் விரிப்பதுவு மடங்குவது மாகுமால்"

என்றது காண்க.

வேனிற் காலத்திலே நீர் வற்றிய ஆற்றிலே கானலை நீரென்று திரியக் கொண்டு மான்கள் செல்லுதலும், நெடுந்தூரஞ் சென்று இரைதேடும் புள்ளினங்கள் மெலிந்து போதலும், பறவைகள் குளிர்தேடிப் பனியுள்ள இடத்தே தங்குதலும், காற்றின்பொருட்டு

உயர்ந்த மாளிகைகளின் மேலிடத்திற்கு மக்கள் செல்லுதலும், குளிர்ச்சி வேண்டி மாந்தர் நிலாமுற் றத்தையும், குளிர்ந்த சோலையையும், பூம்பொய்கை களையும், பூந்துழலாரையும் நாடுதலும், மயில் ஒடுங் கக் குயில் எழுந்து கூவுதலும், வண்டுபாடுதலும், செந்தாமரை மலர் விரிதலுமாகிய செயல்கள் நிகழ் கின்றனவென்று திருஞானசம்பந்தநாயனார் புரா ணம், ௩௮௬, ௩௮௭, ௩௮௮-ம் பாடல்களிற் பகர்ந்த மை தேர்க.

பல்வகை யொலிகளினயத்தைச் சேரமான் பெரு மாணாயனார் புராணத்துள் ஆசிரியர் தொகுத்துரைத் தார்

"காலை யெழும்பல் கலையினொலி களிற்றுக கன்று வடிக்கு [மொலி
சோலை யெழுமென் சுரும்பினொலி துரகச செருக்காற் [சுலவுமொலி
பாலை விபஞ்சி* பயிலுமொலி பாட லாடன் முழவினொலி
வேலை யொலியை விழுங்கியெழ விளங்கி யோங்கும் வியப் [பினதால்." (சேரமான், ௨)

ஒளியின் சிறப்பினைக் கண்ணப்பநாயனார் புரா ணத்திற் சொருகத்துரைத்தமை காண்க.

முங்கிலின் வீழ்ந்த முத்துக்கள் குன்றுபோற் குவிந்து கிடப்பதால் அவற்றின் நிலவொளியும், பாம்பு தன் வாய் நின்று இரைகாண எடுத்து வைத்த செம்மணிச் சோதியும் முறையே திங்களொளியை

*விபஞ்சி - வீணை.

யும், ஞாயிற்றினொளியையும் ஒத்தமையால் திங்களும், ஞாயிறும் இறைவரைக் கும்பிடுவான் திருக்காளத்திமலையை யடைந்தமை போன்ற தென்றார்.

“கழைவளர் தரளக் குன்றிற் கதிர்நில வொருபாற் பொங்க
முழையர வுமிழ்ந்த செய்ய மணிவெயி லொருபான் மொய்ப்
தழைகதிர்ப் பரிதி யோடுஞ் சந்திரன் றலையு வாவிற் [பத்
குழையணி காதர் வெற்புக் கும்பிடச் சென்ற தொக்கும்”
(கண்ணப்ப, கஉக)

என்றது காண்க.

இயற்கை விளக்காலுஞ் செயற்கை விளக்காலும் புறவிருணீக்கப்பட, அகத்தினின்றெழு மொளியால் அகவிருணீக்கத்துடன் புறவிருளொழிவும் நேர்ந்தன வென்பார்,

“செந்தழ லொளியிற் பொங்குந் தீபமா மரங்க ளாலு
மந்திகண் முழையில் வைத்த மணிவிளக் கொளிக ளாலு
மைந்துமா நடக்கி யுள்ளா ரருமபெருஞ் சோதி யாலு
மெந்தையார் திருக்கா ளத்தி மலையினி லிரவொன் றில்லை”
(கண்ணப்ப, கடுக)

என்றார்.

இதனுட் போந்த மூவகை விளக்குகளும் வியத்தகு தோற்றங்களாதலுந் தெளிக.

திருஞானசம்பந்தர் புராணத்திலே, அந்தணர் செய்யும் தூமப்புகையாலாய இரவும் திருநீற்றொளியாலாய பகலும் எப்போதும் உண்மையால், வேறு பகலும் இரவும் மிகையென்று கூறிய அழகை உற்று நோக்குக.

"உளங்கொண்ட மறை வேதியர் தமோமத்து மந்திரவுங்
கிளர்ந்த திரு நீற்றொளியிற் கெழுமியங்க பகலுமலர்ந்
தளர்ந்தறியாப் பலவூழி யாற்றுதலா லகவிடத்து
விளங்கியவம் மூதூர்க்கு வேறிரவும் பகலுமிலை"

என்றும்

பொதுவாய் விளங்குஞ் செய்திகளைச் சொல்லுமுறையால் நயனச் சிறக்கச் செய்துகொண்டு புராணத்துட் சிறந்துள்ளது திருவாரூரதில் சிவபெருமான் திருநாவலூரர்க்காகத் தூது சென்றபெற்றி ஒப்பற்ற பெருமை வாய்ந்ததென்பதை,

"தொடாத தொண்டனென் றுண்டாக்குத் தூதுபோய
நடந்த செந்தா மரையடி நாறுமால்" (மனுநீதி, ௩)

என்றறிவுறுத்தியருளினார்.

திருநீலகண்டநாயனார் திருக்குளத்தின் மூழ்கி யெழுந்தபோது விண்ணவர் பூமாரி பொழிந்தனர் என்ற கருத்தை,

"வாவியின் மூழ்கி யேறுங் கணவரு மனைவி யாரும்
மேவிய மூப்பு நீங்கி விருப்புறு மிளமை பெற்றுத்
தேவரு முனிவர் தாமுஞ் சிறப்பொடு பொழியுந் தெய்வப்
பூவினமா மழையின் மீள மூழ்குவார் போன்று தோன்ற"
(திருநீலகண்டா, ௩௧)

என்ற முறையாகத் தெரிவித்தார்.

அளவற்ற அன்புடன் திண்ணனார் காளத்திமலையை யடைந்தாரென்பார்,

'நாணனு மன்பு முன்பு நளிர்வரை யேறத் தாமும்'
(கண்ணப்ப, ௯௩)

என்றார். இனைய நயங்கள் பல.

இனிப் பெரிய புராணத்திற் போந்த சமயக் கருத்துக்களை ஒரு சிறிது தொகுத்துரைப்பாம். கடவுள் ஒருவர் என்பதைப் பல விடங்களில் ஆசிரியர் குறித்துள்ளார்.

.........................................'எவ்வுயிர்க்குஞ்
சான்று மொருவனை'..................(திருநாவு, ௪௩௪)

'கருவ ரைப்பிற் புகாதவர் கைதொழு
மொருவர்'........... ........ ...... (திருஞான. ௧௮௫)

'ஊர்தொறும் பலிகொண் டுய்க்கு மொருவன்'.........
(குங்குலிய, ௨௨)

'உணர்வி னுணர வொண்ணு வொருவரை'
(இளையா, ௨௩)

'ஏகநா யகரைக் கண்டார்' ..... (கண்ணப்ப. ௧௰௫)

'ஓங்குபூங் கோயிலுள்ளா ரொருவரை'
(தடுத்தாட், ௧௩௭)

அவன் சத்தியுஞ் சிவமுமாய்த் தோன்று முன்னர்ப் பிரிவிலாத வொருபொருளென்பார் 'பேதியா ஏக மாகி' என்றார். இதற்குப் 'பிற பொருளொடு கலந்து நின்ற காலையுந் தன்றன்மை மாறாதவனாய்' என்றும் பொருள் கொள்ளலாம். உயிர்கள் தாமே இறைவனை யறிந்துய்ய இயலாதன வென்பார்,

'உலகெலா முணர்ந் தோதற்கரியவன்' (பாயிரம், க)

என்றார்.

'........................யார்தொடர்ந் தெட்ட வல்லார்'
(தடுத்தாட், சச)

'........................ எல்லை தெரிய வொண்ணாதார்'
(விறன், ச)

'யாவர்களு மறிவரிய இறைவன் றன்னை'
(திருஞான, கயஉ௬)

கடவுள் எல்லை யில்லவர் என்பது,

'எல்லை யில்லவன்......................' (அமர்நீதி, உ௯)

'எல்லை யிலான்......................' (திருநீலகண், கக)

'அந்த மிலவா......................' (திருஞான, ௩எஉ)

'ஈறில்லாதவர் ......................'

'முடிவில்பரம் பொருளானார்'

என்றார்.

கடவுள் எல்லை யற்ற ஒளியுடையவனென்பதை,

'அலகில் சோதியன்......................' (பாயிரம், க)

என்றார்; இறைவனது வரம்பிலாற்றலை யுணர்த்துவான்,

'ஆதியாய் நடுவு மாகி யளவிலா வளவு மாகி'
(தில்லைவாழ், க)

என்றார். முதல்வன் அளவிடப்படாதவனா யிருந்தும் மன்னுயிர்கள் பொருட்டு அளவுட்பட்ட அண்டங்களிலும வியாபகனாய்த் திருமேனிகொண் டெழுந் தருளுதலால், 'அளவுமாகி' என்றார்.

'மூவாத முதலாகி நடுவாகி முடியாத
சேவாருங் கொடியாரை.........' (ஏயர்கோன், கஉசு)

என்றது மது. இறைவன் என்று பிறைபோன் ன் பதை 'மூவாத' என்ற சொல் குறித்து நின்றது.

'மூவாத முழுமுதலார்...........' (ஏயர்கோன், கஙஎ)

என்பார்.

'மூவர் தமக்கு முதலாகு மவரை....' (சேரமான், ௬க)

என்ற விடத்து இறைவன் அயன் அரி அரற்கு வேறாய் அவர்கள் தலைவனவான் என்பது சுட்டப்பட்டது.

'மூவருக் கறிவரும் பொருளாகிய மூலத்தேவர்'

'...................................யார்க்கு
முன்னவனே' (மனுநீதி, ௬எ)

என்ற விடத்து இறைவனது அநாதித்தன்மை குறித்தவாறும் எல்லாவற்றையு முறையினினடாத்து முதல்வனென்பார்,

'ஆனையான்சிவம் ......................' (கண்ண, கடுஉ)

என்றார் எல்லாவற்றையும் படைப்போனும் ஒடுக்குவோனுஞ் சிவனே என்பார்,

'..............எல்லாந் தான்வைத்து வாங்க வல்லான்'
(திருநீலகண்டர், உ௰)

என்றார். 'எவ்வுயிருந் தோற்றுவித்து அயன் போற்றுமந்தணனார்' என்றதுமது. 'எவ்வுயிருந் தருவானை' 'எண்ணில்லாத தேவர்கடம் பெருமானை'

'எல்லா முடைய வீசனே யிறைவ னென்ன வறியாதார்'
(சாக்கியர், எ)

'ஆவது மழிவு மவர்செயல்'

'எப்பொருளு மாக்குவா னீசனே எனுமுணர்வு'

'பெருமயானத்து நடம்புரிவார்'

'எம்பிரான் சிவனே யெல்லாப் பொருளும்'
(திருஞானசம். அசஎ)

என்ற திருவாக்குகளுங் காண்க.

ஐந்தொழிலும் அநாதி யென்பார்,

'ஆதியு முடிவு மில்லா அற்புதத் தனிக்கூத் தாடும் நாதனார்'

என்றார்.

இறைவன் இயல்பாகவே பாசங்களி னீங்கினவரென்பார்,

'கோதிலா வாரமுதை'

'என்றுங் கேடிலாதானை'
(தடுத்தாட், கஉஅ)

'மெய்ப்பொருளானார்'

'உள்ளனிலைப் பொருளாய உம்பர்பிரான்'

'பொய்யன்புக் கெட்டாத ஐயன்'

'ஆயாற் சோதி போற்றி'

என்றார்.

இறைவன் எண் பெருவடிவமாய்த் திகழ்வது மாத்திர மன்றி, உலகங்களுக்கப்பாலுள்ள சுத்த மாயையினுள்ளும் வியாபகமாய் அருள் வடிவாய்த் திகழ்கின்றானுதலிற் றூய வடிவுடையா னென்பார்,

"வானாகி நிலனாகி யனலு மாகி
மாருதமா யிருசுடராய் நீரு மாகி
ஊனாகி யுயிராகி யுணர்வு மாகி
யுலகங்க ளனைத்துமா யுலகுக் கப்பா
லானாத வடிவாகி நின்றார்"

(திருஞான, கூகூ)

என்றார். சிவலிங்கத்தினியல்பு கூறுமிடத்து,

"காணாத அருவினுக்கு முருவினுக்குங் காரணமாய்
நீணாக மணிந்தார்க்கு நிகழ்குறியாஞ் சிவலிங்கம்
காணாது நெடியமா னான்முகனுங் காணாமைக்
கேணுருத் தழற்பிழம்பாய்த் தோன்றியது தெளிந்தாராய்"

என்றமையால், சிவலிங்கம் உலகத்தோற்றத்திற்குக் காரணமாய் இறைவனது அருவுருவச் சோதி வடிவ மென்று கருதப்படும். 'அருவாகி யுருவாகி யனைத்து மாய் நின்றபிரான்' என்றமையால் மூவுருவுங் குறித் தமை காண்க.

இறைவன் மெய்யறிவிற் கிணைந்த வரம்பிலின்ப னென்பார் 'உணர்வினேர் வருஞ் சிவபோகத்தை' என்றார். 'நிலவுலாவிய' 'பருகாவின் னமுதத்தை' 'செய்யதேனை' 'மெய்த்தாயினு மினியானை' 'பேச வினியானை' 'ஆனந்த வெள்ளத்தி னிடைமூழ்கி' 'மலர்ப்பாதக் கமுதூண்டு' 'கல்லையிலின்ப வெள்ள மெனக்கருள் செய்தாய் போற்றி' என்ற திருவாக்கு களில் இறைவனது இன்பவியல்பு குறிக்கப்பட்டமை காண்க.

இறைவன் பேரருளாள னென்பது, 'நீர்மலி வேணியன்' 'எவ்வுயிர்க்குந் தாயானை' 'உலகுய்ய நடமாடும்' 'மன்றுளே திருக்கூத்தாடி யடியவர் மனைக டோறுஞ் சென்றவர் நிலைமை காட்டும்' 'ஏத மில்பல யோனி யெண்பத்து நான்கு நூறாயிரந் தனுள் வைத்த, பேதமும் புரந்தருளுமச் சரணைப் பிரான்' என்பனவற்றாற் பெறப்படும்.

இதுகாறுங் கூறியவாற்றான், இறைவனது எண் குணங்களையும் ஆசிரியர் இனிதுணர வைத்தவாறு தெளியப்படும். கலைஞானத்திற்கும்இறைவனைகாரண னென்பார், 'வேதகாரணராய' 'வேதமுதல்வர்' 'அறிவினெல்லையாய திருத்தில்லை' 'அருமறைச் சிரத் தின் மேலாஞ் சிற்பர வியோமம்' என்றியம்பினர். 'ஐந்தெழுத்தும் பாடிய பொருளாயுள்ளான்' என் றது ஐந்தெழுத்தும மறையென்று குறித்தவாறும். நற்கல்வியின் பயன் கடவுள் வழிபாடென்பார், 'வேதப்பயனாஞ் சைவம்' என்றார். 'வேதவாய்மைக் காவலர்' 'அருமறைச் சைவந் தழைப்ப' 'வாய்மை வேத நன்மைத்திரு நீற்றுயர் நன்னெறி தாங்கு மேன்மை' 'ஆரணத்துட் பொருளாயினானை' 'அரு மறைக ணிந்தவன்பொருள்' என்ற திருவாக்கு களு மிதனை வலியுறுத்தும். 'முந்தைமறை யாயிர மொழிந்த திருவாயான்' 'தூமறை பாடும வாயார்' 'பொருட்டிரு மறைகள் தந்த புனிதன்' 'ஆதியா மறைப்பொருளா அருந்தமிழின் திருப்பதிக மருளிச் செய்ய' 'சொல்லிறந்த ஞான மறைத்திருவாயார்' 'நான் மறை தந்தளித்தார்' 'சந்த மறைதந்தவர்' என்ற திரு

வாக்குகளான், இறைவன் மொழிந்த மறைகள் ஞான மயமாய்த் தூயனவா யிருப்பவை என்று தெரிதலால், இவை இப்போதுள்ள வட நான்மறை யென்று கருத இடமில்லை. நூற்பொருளைத்தான் இறைவன் ஆலின் கீழ் முனிவர்க்கருளாற்றக்கியருளினன் என்றமையால், வடவேதப்பொருளை மட்டுமே அவன் அறிவுறுத்தினனென்பது திட்பமுடைய கொள்கையன்று.

"ஆலின்கீழ் நால்வர்க்கன் றறமுரைத்த அங்கணனை
நூலின்கட் பொருள்பாட நூலறிவார்க் கீந்தானை"

என்றது காண்க. ஆகமங்கள் சொன்ன முறையிலே சிவபூசை நிகழ்தற்குரிய தென்பதை,

'கருணைப்பிரான் மொழிந்த ஆகமவழி போற்றி'

'எண்ணிலாகம மியம்பிய இறைவர்தாம் விரும்பும்
உண்மையாவது பூசனை யெனவுரைத் தருள'

"பொங்கு மாமறைப் புற்றிடங் கொண்டவ
ரெங்கு மாகி யிருந்தவர் பூசனைக்
கங்கண் வேண்டு நிபந்தமா ராய்ந்துளான்
றங்க ளாகமஞ் சொன்ன முறைமையால்" (மனு, ௧௨)

'எய்தியசீ ராகமத்தி லியம்பியபூ சனைக்கேற்ப'
(கண்ண, ௧௩௨)

என்ற திருவாக்குகளாற் றெளியப்படும் ஆகமநெறியின் வேறாக 'அறிந்த நெறி'ப்படி பூசித்தலும் அன்பர் செயற்பாலதே யென்பது கண்ணப்பர் இறைவனை வழிபட்டா ரென்று கூறுவார்,

'அங்கிலையி லன்பனா ரறிந்தநெறி பூசிப்ப'

என்றமையின்வைத் தினிதுணரப்படும்.

மறைகளா லறியப்படாதவ னென்பார்,

'மயக்கற மறைமேயா விட்டு மாலயனா றேட நின்றான்'
(இயற்பகை, உக)

' ................ .. ..செழுமறைக
ளோல மிடவு முணராவப்பர்' (விறன்மிண், க)

என்றார். வேதாகமங்களின் குறியிறந்தவன் இறைவ னென்று குறித்தவாறும். கண்ணப்ப நாயனார் புராணத்திலே, இறைவன் அருணோக்கினாலே மும் மலங்கெடுதல் கூறப்பட்டது.

'யாக்கைத்
தன்பரிசும் வினையிரண்டுஞ் சாருமலம் மூன்றுமற'
(கண, கருச)

என்றவிடத்து, மூன்று மலத்துள் ஒன்றாகிய கரும மலமென்பது மூலகன்மமாதலின், இருவினையின் வேறாக அதனைக் கருதினாரென்க. 'யாக்கைத் தன் பரிசு' என்றவிடத்து, மாயாமலங் குறிக்கப்பட்டா லும், யாக்கைக்கு மூலகாரணமாய மாயையை, அதனின் வேறாகக் கருதினமை தெளிக.

'மும்மை
மாமலங்களற வீடருளில்லை (தடுத்தாட், கஉ)

என்றவிடத்து, 'மாமலம்' என்பது மூலமலமென் பதைக் குறிக்கும்.

'ஆதிவரு மும்மலமு மறுத்த வாய்மை' (முழுநீறுபூ, ௩)

என்றது காண்க.

'பந்தம் வீடு தரும்பர மன்கழல்' (தடுத்தாட், கருஎ)

என்றமையால், இறைவனது சத்தியினாலே மறைப்பும் அருளும் நடைபெறுகின்றன வென்பது குறித்தவாறும்.

'இருவினைப் பாசமு மலக்க லார்த்தலின்'
(திருநாவு, கஉக)

என்ற விடத்து 'மலம்' என்பது ஆணவத்தை யுணர்த்தி நின்றது.

'பேணுந் தத்துவங்க ளென்னும் பெருகுசோ பானமேறி
யாணையாஞ் சிவத்தைச் சார' (கண், ௫௩)

என்றமையால், தத்துவங்கள் படிமுறையி லுள்ளன வென்பதும் அவற்றையெல்லாங் கடந்த பரம்பொருள் சிவமென்பதும் அறியற்பாலன.

'முன்னைவல் வினையு நீங்கி முதல்வனை யறியுந் தன்மை
துன்னினன் வினைக ளொத்துத் துலையென நிற்ற லாலே'
(திருஞானசம், அகக)

என்ற விடத்து, இருவினை யொப்பினாலேதான், முதல்வனை யறியுந் தன்மை வந்தெய்து மென்ப துணர்த்தப்பட்டது.

'ஞானமுத னான்குமலர் நற்றிருமந் திரமாலை'

என்றமையால், 'சரியை, கிரியை, யோகம், ஞானம்' என்ற நான்கும் ஆசிரியராற் சுட்டப்பட்டன.

'அறுசமயத் தலைவராய் நின்றவர்' (சாக்கியர், க)

என இறைவனைச் சிறப்பித்தமையாலும்,

'அறுவகைச் சமயத்தி லருந்தவரு மடியவரும்'
(திருஞான, கஉ௯உ)

முத்தி புக்கதாகக் கூறினமையாலும், உட்சமயம் ஆறினையே 'அறுசமய' மென ஆசிரியர் விதந்தன ரென்று தெரிகிறது. சைவத்தின் றனிச்சிறப்பை ஆசிரியர் விதந்து கூறும் பாட்டு வருமாறு:

"செய்வினையுஞ் செய்வானு மதன்பயனுஞ் சேர்ப்பானு[டே
மெய்வகையா னான்காகும் விதித்தபொரு ளெனக்கொண்
யிவ்வியல்பு சைவநெறி யல்லவற்றுக் கில்லையென [தார்"
வுய்வகையாற் பொருள்சிவனென் றருளாலே யுணர்ந்தறிந்
(சாக்கியர், ௫)

சிவயோகத்தினியல்பைப் பெருமிழலைக் குறும்பர் புராணத்திலும், சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார் புராணத்திலுஞ், சுருக்கமாகக் கூறினார் சரியையுங் கிரியையுந் திருத்தொண்டு என்பதனுள் அடக்கி அதனை விரிவாகப் புராணத்துட் கூறினமை வெளிப் படை.

பெரிய புராணத்திலே, பயன் கருதாது மன மொழி மெய்களாற் செய்யும் பல்வகைத் திருத் தொண்டினாலும், சிவயோகத்தாலும், முழுநீறுபூசி நிலையாமையுணர்ந்து சிவத்தியான முதிர்ச்சியினாலும் இறைவன் றிருவருட்பேற்றிற் குரிமை நேர்ந்து ஞான மெய்தி உயிர்கள் வீடடையும் பான்மையன என் பதே பெறப்படும். திருத்தொண்டு என்பதில், உலகி

னுள்ள பிறநெறிகளெல்லாம் அடங்குமென்றன் மிகை யாகாது 'அப்பாலுமடிச் சார்ந்தார்' என்னுந் திருக் கூட்டத்துள், பிறநாட்டிலே தவமியற்றி ஞானம் பெற் றுச் சிவனடி சேர்ந்தாரும், முக்காலத்திலுஞ் சேரும் பான்மையர் யாரும் அடங்குவராதலின் பெரிய புரா ணத்தின் விரிந்த நோக்கமும் பொருள்கோளும் அதனை உலகர்க்குப் பொது நூலெனக் குறிக்குமியல் பின.

திருத்தொண்டின் இயல்பினை ஒரு சிறிது ஆராய் வாம். நேசநாயனார் புராணத்திலே திரிகரணத்தாலும் அவர் தொண்டியற்றியதை ஆசிரியர் ஒரு செய்யுளுட் குறித்தனர்.

"ஆங்கவர் மனத்தின் செய்கை யரனடிப் போதுக் காக்கி
யோங்கிய வாக்கின் செய்கை யுயர்ந்தவஞ் செழுத்துக் காக்கித்
தாங்குகைத் தொழிலின் செய்கை தம்பிரா னடியார்க் காக"
(நேசநாயனார், ௩)

என்றமை காண்க.

திருத்தொண்டர் எப்போதும் இறைவனை மற வாத இயல்புடையரென்பார்,

"நின்றாலு மிருந்தாலுங் கிடந்தாலு நடந்தாலு
மென்றாலுந் துயின்றாலும் விழித்தாலு மிமைத்தாலு
மன்றாடு மலர்ப்பாத மொருகாலு மறவாமை
குன்றாத வுணர்வுடையார் தொண்டராங் குணமிக்கார்"
(பத்தராய்ப்பணிவார், எ)

'அன்பிற்கு முண்டோ வடைக்குந்தாழ்'

என்பதற்கிணங்கச் சிவனடிப் பேரன்பர்க்கு அன்பின் மெய்ப்பாடு நிகழ்வதைப் பலவிடங்களில் ஆசிரியர் விதந்துள்ளார்.

"ஈசனையே பணிந்துருகி யின்பமிகக் களிவெய்திப்
பேசினவாய் தழுதழுப்பக் கண்ணீரின் பெருந்தாரை
மாசிலா நீறழித்தங் கருவிதர மயிர்சிலிர்ப்பக்
கூசியே யுடல்கம்பித் திடுவார்மெய்க் குணமிக்கார்"
(பத்தராய்ப்பணிவார், ௬)

அன்பே பெரியபுராண உயிர்க்கருத்தென்பதை,

'கூடு மன்பினிற் கும்பிட லேயன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்' (திருக்கூட், ௮)

என்பதனாற் பெறவைத்தார்.

தடுத்தாட்கொண்ட புராணத்திலே திருநாவலூரர் பேரன்பினைச் சில மொழிகளால் ஆசிரியர் தெளிவாகப் புலப்படுத்தினர்.

'ஊனனு முயிரு முருக்கு மன்பா
லுச்சிகுவித்த செங் கைகளோடும்' (தடுத், ௧௨௪)

"என்றெழு மோசை கேளா வீன்றவான் கனைப்புக கேட்ட
கன்றுபோற் கதறி நம்பி கரசர ணாதி யங்கந்
தோன்றிய புளக மாகத் தொழுதகை தலைமே லாக"
(தடுத்தாட், ௬௮)

"அன்பு பெருக வுருகியுள்ள மலைய..............
.....................முடி விலாக் காதன் முதிரவோங்கி
நன்புல னாகிய வைந்துமொன்றி நாயகன் சேவடி யெய்தப்பெ
இன்பவெள் ளத்திடை மூழ்கிநின்றே" (தடுத், ௧௨௬) [ற்ற

என்றமை காண்க.

'கண்ட வர்க்குறு காதலின் மனங்கரைந் துருகத்
தொண்ட ரன்பெனுந் தூநெறி வெளிப்படுப் பாராய்'
(அமர்நீதி, க)

என்றமையால், இறைவன் தொண்டரன்பினை யுலகினர்க்குணர்த்த அமர்நீதி நாயனார்க்குத் தோற்றித் திருவிளையாட லியற்றின ரென்பது தெளியப்படும்; இக்கருத்துத் திருநீலகண்டர் புராணத்திலுங் குறிக்கப்பட்டது.

"மின்னொளிர் சடையோன் றானுந் தொண்டரை
விளக்கங் காண
நன்னெறி யிதுவா மென்று ஞாலத்தோர்
விரும்பி யுய்ய
மன்னெறி காட்டு மாற்றா லருட்சிவ
யோகி யாகி" (திருநீலகண்ட, க௰)

என்றனர்.

கண்ணப்ப நாயனார் புராணத்துள்ளும் அன்பின் மெய்ப்பாடு கூறுவார்,

'மன்பெருங் காதல் கூர வள்ளலார் மலையை நோக்கி
யென்புநெக் குருகி யுள்ளத் தெழுபெரு வேட்கை யோடும்'
(கண்ணப், ௱௨)

'நெடிதுபோ துயிர்த்து நின்று
நிறைந்தெழு மயிர்க்கா றோறும்
வடிவெலாம் புளகம் பொங்க
மலர்க்கணீ ரருவி பாய
வடியனேற் கிவர்தா மிங்கே
யகப்பட்டா ரச்சோ வென்று
படியிலாப் பரிவுதானோர்
படிவமாம் பரிசு தோன்ற' (கண்ணப், க௰க)

இன்னும் ககஉ-ம், ககங-ம் பாட்டுக்களில் இறைவனைப் பிரிதலாற்றாமையை அழகுற இயம்பினமை காண்க.

'போதுவர் மீண்டு செல்வர் புல்லுவர் மீளப் போவர்
காதலி னோக்கி நிற்பர் கன்றகல் புனிற்றாப் போல்வர்'

'சோர்தரு கண்ணீர் வாரப் போய்வரத் துணிந்தாராகி'

திருநாவுக்கரசர் புராணத்திலே, சொல்வேந்தர் மெய்ப்பாட்டுரைக்குஞ் செய்யுள் வருமாறு:

"கையுந் தலைமிசை புனையஞ்சலியன
கண்ணும் பொழிமழை யொழியாதே
பெய்யுந் தகையன கரணங் களுமுட
னுருகும் பரிவின" (திருநாவு, கருஎ)

"வார்ந்து சொரிந்த கண்ணருவி
மயிர்க்கா றோறும வரும்புளக
மார்ந்த மேனிப் புறம்பலைப்ப
வன்பு கரைந்தென் புள்ளலைப்பச
சேர்ந்த நயனப் பயன்பெற்றுத்
திளைப்பத் திருவே கம்பர்தமை
நேர்ந்த மனத்தி னுறவைத்து
நீடும் பதிகம் பாடுவார்" (திருநாவு, ஙஉங)

காரைக்காலம்மையார் புராணத்துள்,

..................'பொருவிடையார் திருவடிக்கீ
ழோங்கியவன் புறகாத லொழிவின்றி மிகப்பெருக'
(கஎ)

'மெய்ம்மறந்து நினைந்துற்ற விடத்துதவும் விடையவர்தா
டம்மனங்கொண் டுணர்தலுமே' (உ௰)

என்றமையால், புனிதவதியார் பேரன்பு தெளிக. அம்மையார் இறைவனிடம் முதற்கண் வேண்டியது 'இறவாதவின்ப அன்பே'.

திருஞான சம்பந்தர் புராணத்துள் அன்பின் இணையற்ற பெருக்கினை அவர் வேடர் பெருமானாகிய கண்ணப்ப நாயனாரை வணங்கிய விடத்து ஆசிரியர் மிக அழகாகப் புலப்படுத்தினார். அன்பினையும் அன்பின் பயனையு மொருங்கே ஞான வள்ளலார் கண்டா ரென்றார்.

"வீழ்ந்தெழுவார் கும்பிட்ட பயன்காண் பார்போன்
மெய்வேடர் பெருமானைக கண்டு வீழ்ந்தார்"
(திருஞான, கம்உஉ)

"உள்ளத்திற் றெளிகின்ற வன்பின் மெய்ம்மை
யுருவினையு மவ்வன்பி னுள்ளே மன்னும்
வெள்ளசெஞ் சடைக்கற்றை நெற்றிச் செங்கண்
விமலரையு முடன்கண்ட விருப்பும் பொங்கிப்
பள்ளத்தி லிழிபுனல்போற் பரந்து செல்லப்
பைம்பொன்மலை வல்லிபரிந் தளித்த செம்பொன்
வள்ளத்தில் ஞானவா ரமுத முண்டார்
மகிழ்ந்தெழுந்து பலமுறையும் வணங்கு கின்றார்."
(திருஞான, கம்உங)

சைவ சமயத்தின் பெருமையைத் தெளிவாகப் பல இடங்களில் ஆசிரியர் குறித்திருப்பது பாராட்டத் தக்கது. மூர்த்தி நாயனார் புராணம் சஙு-வது செய்யுளில்,

"நிலவுந்திரு நீற்று நெறித்துறை நீடு வாழ
வுலகெங்கு நிரம்பிய சைவ முயர்ந்து மன்ன."

என்றார். சிறப்பாகிய திருநீற்றுநெறி ஈண்டுத் தழைப் பவும், பொதுவாகிய சிவநெறி ஞாலமெங்கும் நிரம்பி நிலைபெறவும் என்று குறித்தமை வியக்கத்தக்கது. கடவுட் கொள்கையைச் செவ்விதாக வுடைய எந் நெறியுஞ் சைவச்சார்பாயது என்றுய்த்துணர்க.

"சைவநெறி தலமேழும் பாலிக்குந் தகைமையினால்"
(திருநாவு, கஉ)

என்றவிடத்து மேலாய ஏழுலகத்தாரும் சிவநெறி யினரென்பதறியற்பாற்று.

"பொருட்சமய முதற்சைவநெறி" (திருநாவு, கஅ௯) என்றமையால், மெய்யாய நெறிகளுண் முதன்மை யானது சிவநெறியென்பது ஆசிரியர் கருத்து.

வைதிக நெறிகளுள் வாய்மையானது சைவச் செந்நெறியென்பார்,

.................."வைதிக வாய்மைச் சைவச்
செந்நெறி விளக்கு கின்றார்" (திருஞான, சுய௯)

"உலகியல் வேதநூ லொழுக்க மென்பது
நிலவுமெய்ந் நெறிசிவ நெறியே யென்பதும்"

என்றது இதனை வற்புறுத்தும். சண்டேசுர நாயனார் தோன்றியருளியது சைவம் வளர்த்தற் பொருட் டென்பார்,

"மன்றி னடஞ்செய் பவர்சைவ வாய்மை வளர.........
............வந்துதயஞ் செய்தார் விசார சருமனார்."
(சண்டேசுரர், கஉ)

என்றார்.

அறத்தை அடிப்படையாக வுடையது சைவம் என்பார்,

"அறங்கொள் சைவத் திறந்தழைப்ப"
(சேரமான், ரு)

என்றார்.

சைவத்தின் அளப்பிலாத்தன்மையை,

"ச
நன்னெறியே பொருளாவ தெனவுணர்வு நாட்டுவார்'
(சாக்கியர், ௪)

என்றவிடத்துத் தெரித்தனர். சிவநெறியைத் திருநெறி யென்பது வழக்காதலின்,

"தேனலர் கொன்றை யார்தந் திருநெறி நடந்த தன்றே"
(திருஞான, அருக)

என்றனர்.

விறன்மிண்ட நாயனார் புராணத்துள் சைவத்தின் றொன்மையை ஆசிரியர் விதந்தோதினர்.

"ஒக்க நெடுநா ளிவ்வுலகி லுயர்ந்த சைவப் பெருந்தன்மை
தொக்க நிலைமை நெறிபோற்றி" (விறன்மிண், கம)

என்றது காண்க.

விறன்மிண்டரே பெரிய புராணத்திற்கு மூலமாய்த் திருத்தொண்டத்தொகை பாடப் பெறுதற்குக் காரணமானவராதலின், அவர் பெருமையை ஆசிரியர் போற்றிய பகுதியொடு இச்சிறிய வாராய்ச்சி முடிவு பெறுகின்றது.

"ஞால முய்ய நாமுய்ய நம்பிசைவ நன்னெறியின்
சீல முய்யத் திருத்தொண்டத் தொகைமுன் பாடச் செழுமறைக
ளோல மிடவு முணர்வரியா ரடியா ருடனு முளதென்று
ரால மமுது செய்தபிரா னடியார் பெருமை யறிந்தாரார."

முற்றும்.